# முன்னுரை

மொழிப் பிரச்சினையில் நமது மக்களிடையே எழுந்துள்ள நெருக்கடிபற்றி, இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் கவுன்சில் செயற்குழு ஒரு அறிக்கை விட்டுள்ளது. அதை இங்கே பிரசுரித்துள்ளோம்.

பதினேழு ஆண்டுகளுக்கு முன் இந்தியா சுதந்திரமடைந்த போது, ஆங்கிலம்தான் நமது நாட்டின் கல்வி, நிர்வாகம், நீதி ஆகிய துறைகளில் ஆதிக்கம் வகித்த மொழி. இரண்டு நூற்றாண்டுகளாக பிரிட்டிஷார் நமது நாட்டை ஆண்டுவந்தபோது, உணர்வு பூர்வமாகவும், நுணுக்கமான முயற்சிகள் மூலமாகவும் நமது கலாச்சார, அறிவுத்துறைகளில் ஆங்கிலத்தின் ஆதிக்கத்தை நிலைநாட்டினர். அவர்கள் நமது மக்களின் மொழிகள் வளர்ச்சியடைவதைத் தடை செய்தனர். இதன்மூலம் மக்களின் முன்னேற்றம் தடைப்பட்டு, அறியாமையில் மூழ்கியிருந்தனர்.

இதன்மூலம் ஆங்கிலம் தெரிந்த சிறு பகுதியினரை நாடு முழுமையும் தயார் செய்து அவர்களின் உதவிகொண்டு நாட்டை ஆள அந்நியர்களுக்கு வசதியாக இருந்தது.

காந்திஜி-நேரு ஆகியோரின் தலைமையில் தேசிய இயக்கம் 1920லிருந்து, ஹிந்தியை நமது தேசிய மொழியாகவும், மற்றும் மாகாணங்களில் பிரதேச மொழிகள் ஆட்சி மொழிளாகவுமிருக்க வேண்டுமெனக் கோரிவந்துள்ளது.

இது நமது மக்களுக்கு ஒரு அடிப்படையான பிரச்னையாகும். ஏனெனில் ஒரு அந்நிய மொழியாகிய ஆங்கிலம், நமது நாட்டின் நீதி, நிர்வாகம், கல்வித் துறைகளில் ஆதிக்கம் வகிக்கும் காலம்வரை ஜனநாயகம் வெறும் சம்பிரதாயமாகவே இருந்துவரும். ஆங்கிலம் தெரிந்தவர்கள் நமது நாட்டில் 5 சத விகிதம்தான் என்பது எல்லோரும் அறிந்த விஷயமே. எனவே, ஆங்கிலம் ஆதிக்கம் வகிக்கும்வரை, நமது மக்களின் கலாசார வளர்ச்சி பாதிக்கும், பின்தங்கி நிற்கும். இதன் பொருள் என்ன? நீதி, நிர்வாகம், கல்வி ஆகிய

துறைகளில் மக்களுக்கு ஞானம் குறைவாகவே யிருக்கும். ஆங்கிலம் தெரிந்தவர்களின் உதவியை நாடியேதான் வாழவேண்டும் என்ற நிலை நீடிக்கும். இம் மூன்று துறைகளிலும் ஆங்கில ஞானமுள்ள மேற்தட்டுப் பகுதியினரின் ஏகபோகம் நீடிக்கவே உதவும். எனவே, இந்திய ஜனநாயகம் செயலாற்றலில் வரவேண்டுமெனில், பிரதேச மொழிகளை எவ்வளவு துரிதமாக மாகாணங்களில் ஆட்சிக்கு கொண்டு வருகிறோமோ அவ்வளவு துரிதமாகக் கொண்டு வரவேண்டும்.

இந்தியா சுதந்திரமடைந்து இந்தியக் குடியரசுச் சட்டம் உருவாக்கப்பட்ட சமயம் ஹிந்தியை இறுதியாக ஆட்சிமொழியாக இயற்கையாகவே ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதே சமயம் ஆங்கிலத்தை 1965 வரை இடைக்காலமாகப் பயன்படுத்துவது எனவும் தீர்மானிக்கப்பட்டது. மேலும் ஒவ்வொரு ராஜ்ஜியத்திலும் அந்தந்த பிரதேச மொழியே ஆட்சிமொழியாக அமையவேண்டும் எனவும் தீர்மானிக்கப்பட்டது.

ஆனால் ஹிந்தி பேசும் பிரதேசங்களிலும் ஹிந்தி பேசாத பிரதேசங்களிலும் நிலைமைகள் வேறுவிதமாகப் பரிணமித்தது.

ஹிந்தி பேசும் பிரதேசத்தில் சமஸ்கிருதத்தன்மை வாய்ந்ததாகவும், நவீன வளர்ச்சிக்கேற்ப அபிவிருத்தியடையாததாகவும் உள்ள ஹிந்தி பல துறைகளில் சிறிது துரிதமாகவே உபயோகிக்கப்பட்டு வந்தது. குறிப்பாக அரசாங்க நிர்வாகத்துறையிலும் எல்லா மட்டங்களிலும், நீதித் துறையிலும், சாதாரண கல்வித் துறையிலும், (தொழிற்நுணுக்கத் துறையில் இல்லை) சுதந்திரமடைந்த 10 ஆண்டுகளில், ஹிந்தி அதிகமாக உபயோகிக்கப்பட்ட மொழியாகிவிட்டது. இத்தகைய வளர்ச்சிக்கு ஹிந்தி பேசும் பிரதேசத்தில் குறிப்பிட்ட எதிர்ப்பு இல்லை; பொதுமக்களிடம் ஆதரவு பெருகியது. அப்பகுதியில் ஆங்கிலம் தெரிந்த பகுதியினரிடமிருந்துகூட எதிர்ப்பு கிடையாது.

இதற்குரிய காரணங்கள் தெளிவானது. அது என்னவெனில், ஹிந்தி ஆட்சிமொழியாக ஆக்கப்படும் என்கிற அரசியல் சட்ட உத்தரவாதமிருந்தது. எனவே ஹிந்தி பேசும் மாணவர்கள் ஹிந்தி மொழியிலேயே கல்வி கற்க ஆரம்பித்தனர். இதில்தான்

எல்லா பரீட்சைகளும், அகில இந்தியப் பரீட்சை உட்பட நடத்தப் படும் என எக்கருதி நம்பிக்கையுடன் பயின்றனர். நமது மக்களின் வாழ்வில் ஹிந்தி ஒரு முக்கிய ஸ்தானத்தை வகிக்கும் என உறுதி யாகக் கருதி அம்மொழியில் பயின்று பலனை அடைய விரும்பினர். எனவே ஹிந்தி பேசும் பிரதேசத்தில், ஹிந்திமொழி வேகமாக வளர்ந்து, அப்பிரதேசத்தில் ஆட்சிமொழி ஸ்தானத்தை அடைந் துள்ளது.

ஹிந்தி பேசாத பிரதேசத்தில் நிலைமை வேறுபட்டிருந்தது. இங்கே பிரதேச மொழிகளில் (உதாரணமாக தமிழ் நாட்டில் தமி ழும், கேரளாவில் மலையாளமும்) கல்வி கற்பவர்களுக்கு மாகாண மட்டத்திலோ, அகில இந்திய மட்டத்திலோ உத்தரவாதமாக வேலை வாய்ப்பு கிடைக்காத நிலையில், அம்மொழிகளை ஆட்சி மொழிகளாக்கும் வேகம் மிகமிகக் குறைவாகவேயிருந்தது. இதன் காரணமாக தென் ராஜ்யங்களில் (ஆந்திரம், கர்நாடகம், கேரளம், தமிழ்நாடு) ஆங்கிலம்தான் இன்னும் ஆதிக்க நிலையிலிருந்துவரு கிறது. இது நீதி, நிர்வாகம், உயர்கல்வித்துறை ஆகியவற்றில் இந்நிலை நீடிக்கிறது.

தமிழ் நாட்டில் பரீட்சார்த்தமாக, பிரதேச மொழியைக் (தமிழ்) கல்லூரி மட்டத்தில் சில இடங்களில் போதனமொழி யாக்கப்பட்டது. ஆனால் இத்திட்டம் தோல்வியுற்றதாக 1962-ல் சர்க்கார் அறிவித்தது. ஏன் இந்த நிலை? மாணவர்கள் ஆங்கில மொழி போதனையையே விரும்பினர். சர்க்கார் உதவித்தொகை, சம்பளச் சலுகை ஆகியவற்றைக் காட்டியபோதிலும் மாணவர்கள் தமிழ் போதனமொழிக் கல்லூரிகளில் சேரவிரும்பவில்லை.

எனவே சில கல்லூரிகளில் முயற்சிக்கப்பட்ட தமிழ் போதன மொழித் திட்டமும் கைவிடப்பட்டது. இதற்கு மாறாக சென்னை சர்க்கார், பள்ளிகளில் ஆங்கில போதனை முறைத் தனி வகுப்பு களையும் ஏற்படுத்த ஆரம்பித்தனர். எனவே பின்னோக்கிப் போகும் போக்குத்தான் ஏற்பட்டது. நிலைமை வேறு விதமாக மாறியது.

தமிழைப் பயிற்சி மொழியாக்கும் திட்டம் ஏன் தோல்வி யடைந்தது? ஏனெனில் தமிழைப் பயிற்சிமொழியாக ஏற்று கல்வி

கற்ற மாணவர்களுக்கு மாகாணத்திலோ, அகில இந்திய மட்டத்திலோ, சர்க்கார் வேலையில் சலுகை கிடைக்கும் என உத்தரவாதம் கிடைக்காத காரணத்தால் தான் அடிப்படையிலேயே இத் திட்டம் தோல்வியுற்றது. எந்த மாணவனுவது ஒரு அகில இந்திய உத்தியோகத்தை நினைத்து, (ஐ.ஏ.எஸ், இந்திய வெளிநாட்டுத் துறை சேவை, இந்தியப் போலீஸ் துறை போன்றவைகள்) தமிழைப் போதனு மொழியாகக் கொண்ட கல்லூரிகளில் சேர்ந்து கல்வி கற்றுல் என்ன பலன்? பயனற்ற வீண் முயற்சிதானே? எனவே ஆங்கில மொழியில் கல்வி கற்பது ஒன்றே வேலை வாய்ப்பு அளிக்கும் என்ற உணர்வோடு ஆங்கில போதனு முறையைத் தேர்ந்தெடுக்கும் நிலை ஹிந்தி பேசாத பிரதேசங்களில் வேகமாக வளர்ந்தது. குறிப்பாக தமிழ்நாட்டில் இந்த வேகம் அதிகம்.

இந்தப் பின்னணியில்தான் ஆங்கிலம் தெரிந்த மாணவன், 26-1-65 முதல் ஹிந்தி ஆட்சி மொழியாகப் பிரகடனப்படுத்தப் பட்டபோது, தனது எதிர்காலத்திற்கு நேரடியான ஆபத்து ஏற்பட்டு விட்டதாகக் கருதினுன். அதோடு மத்திய அரசாங்க வேலைகளுக்கு நடக்கும் பரீட்சையில் ஆங்கிலம் நீக்கப்பட்டு ஹிந்தி கொண்டு வரப்படும் நிலை உருவாகிறது என பயந்தான். இது அகில இந்திய முறையில் அமைந்த உத்தியோகங்கள், நிர்வாக வேலைகள், நீதித் துறை ஆகியவற்றில்வேகமாக வந்துவிடும் என மிகவும் அஞ்சினுன். எனவே தனது சுயப் பாதுகாப்புக்காகவே ஹிந்தியை எதிர்த்துப் போராடத் துணிந்தான். இந்த எதிர்ப்பு இயற்கையாகவே ஆங்கிலத்தை ஆட்சிமொழியாக நீடிக்கவேண்டும் என்ற கோரிக்கையாக உருவெடுத்தது. இம் மாநில காங்கிரஸ் சர்க்காரே, ஆங்கில ஆதரவு, தமிழ் எதிர்ப்புக் கொள்கையைக் கடைப் பிடித்ததினுல் இந்த நிலை உருவாகியது.

இப் பின்னணியில்தான். கம்யூனிஸ்ட்டுகளாகிய நாங்கள், இத் துடனுள்ள அறிக்கையில் எங்கள் யோசனைகளை வைத்துள்ளோம். ஆங்கிலத்தை உயர்கல்விக்கும், நிர்வாகத் துறை, நீதித்துறை ஆகியவற்றிற்கும் பயன்படுத்துவது நீடித்து வருவதன் மூலம், மிகப் பெரும்பான்மையான மக்கள், வாழ்வில் இந்த ஜீவாதாரமான துறைகளில் பங்கெடுக்க முடியாத நிலைதான் நீடிக்கும் என அஞ்சுகிறேம். அதேசமயம் ஹிந்தி தெரியாத மாணவர்களின்

அச்சம் நியாயமானது எனக் கருதுகிறோம். இன்றைய காங்கிரஸ் கொள்கை, ஒருபுறம் ஹிந்தியின் வளர்ச்சிக்கு வழியும், மறுபுறம் பிரதேசமொழிகளின் வளர்ச்சிக்கு நடவடிக்கைகள் எடுக்காத நிலையும் எதிர்காலத்தை பயங்கரமாக்குகிறது. எனவேதான் நாங்கள் 8 அம்சங்கள்கொண்ட கோரிக்கைகளை முன்வைக்கிறோம்.

பிரச்னையின் சாரம் என்ன? சாதாரண மனிதன் சர்க்கார், கோர்ட்டு நடவடிக்கைகளில் பங்கெடுக்கவேண்டுமெனில், ஒவ்வொரு ராஜ்யத்திலும் அந்தந்த பிரதேச மொழி ஆட்சிமொழியாக வரவேண்டும் என்பதேயாகும். சாதாரண மனிதன் தன்னுரிமை நிலையை அடைவதற்கு கல்வி ஞானம் அவசியம். இதற்கு கல்வியின் வளர்ச்சி வெகுவேகமாகப் பரவவேண்டும். இதுதான், பின் தங்கிய நிலையையும், அறியாமையையும் நமது மக்களிடமிருந்து அகற்றும் சக்தி வாய்ந்தது. இம்மாதிரி கல்வி வேகமாகப் பரவ வேண்டுமெனில், லட்சோப லட்சம் மக்கள் பேசும் மொழியாகிய பிரதேச மொழியில் கல்வியின் சகல துறைகளும் போதிக்கப்பட்டால்தான் இது சாத்தியப்படும்.

இது நமது அடிப்படை அணுகுமுறையாக அமைந்து, அதே சமயம் எது இந்தியாவின் தொடர்பு மொழி என்பதுபற்றி இந்தியாவின் சகல பகுதி மக்களும்கூடித் தீர்மானிக்கும்வரை, ஆங்கிலமும் ஹிந்தியும் ஒன்றுக்கொன்று துணையாக அகில இந்தியத் தொடர்பு மொழியாக நீடிக்கலாம் என்பதே எங்கள் கருத்து. இப்படிச் செய்வது தான் தேசிய ஒருமைப்பாட்டிற்கும், இந்திய மக்கள் ஒருவருக்கொருவர் நெருக்கமாகக் கூடி வாழ்வதற்கும் அடிப்படையாக அமையும் என உறுதியாக நம்புகிறோம். இந்நிலையில் தான் மொழிப் பிரச்னை மக்களைப் பிரிக்கும் கருவியாக அமையாமல் ஒற்றுமையை வளர்க்கும் கருவியாக அமையும்.

மும்மொழிக் கொள்கையை உறுதியாகக் கடைப்பிடிப்பதே இப் பிரச்னைக்குத் தீர்வுகாண உதவும் என நாங்கள் வலியுறுத்துகிறோம். இது மூன்று மொழிகளுக்கும் உரிய இறுதி ஸ்தானத்தை நிலைநாட்டும்— பிரதேச மொழிகள் ராஜ்ஜிய ஆட்சி மொழியாகவும், ஹிந்தி அகில இந்தியத் தொடர்பு மொழியாகவும், ஆங்கிலம் சர்வதேச உபயோகத்திற்கும் பயன்படும் நிலையை உருவாக்கித் தரும்.

இந்திய ஒற்றுமையைப் பாதுகாத்து, இந்திய ஜனநாயகத்தை வளர்க்கவும், இந்திய மொழிகளிடையே சமத்துவ நிலையை ஏற்படுத்தவும், கம்யூனிஸ்ட் கட்சி மக்கள் முன்னால் வைக்கும் திட்டம் தான் இந்திய மக்களின் எதிர்காலத்திற்கு உகந்ததாகும்.

**இந்திய கம்யூனிஸ்ட் கட்சி,**
**தமிழ் மாநிலக் கவுன்சில்**
**செயற்குழு.**

*சென்னை-1.*
*18-2-'65*

# மொழிப்பிரச்சினையும் மாணவர்கள் கிளர்ச்சியும்

## இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ் மாநிலச் செயற்குழு வெளியிட்ட அறிக்கை



ஜனவரி மாதம் 26-ம் தேதியன்று இந்திய அரசியல்சட்டப்படி ஹிந்தியை ஆட்சி மொழியாக அமுலுக்குக் கொண்டுவருவதென்று உத்திரவிடப்பட்டது. இந்த உத்தரவைப் பிறப்பிப்பதற்கு முன்பாக ராஜ்ய முதலமைச்சர்களின் கூட்டத்தில் சம்மதம் பெறப்பட்டதாகவும் சர்க்கார் தரப்பில் கூறப்படுகிறது. இந்த உத்தரவைப் பிறப்பித்த போதும், அதை அமுல் நடத்துவதற்கு இலாக்காக்களுக்கு சுற்றறிக்கைகள் அனுப்பியபோதும், காலஞ்சென்ற பண்டித நேரு அவர்கள், ஹிந்தி பேசாத பகுதி மக்கள் விரும்புகிற காலம் வரையில் ஆங்கிலம் துணை ஆட்சிமொழியாக இருக்கும் என்று தந்த வாக்குறுதி மீறப்பட்டுள்ளது. 1963-ம் வருடத்திய ஆட்சி மொழிச் சட்டம், திரு. நேரு அவர்களின் உறுதிமொழிக்கான சட்ட உத்தரவாதம் என்று சர்க்காரே வியாக்கியானப்படுத்தியதும்கூட இன்று அலட்சியப்படுத்தப்பட்டுள்ளது. இவைகளின் காரணமாக ஜனவரி 26-ம் தேதியன்று பிறப்பித்த ஹிந்தி நுழைப்பு உத்திரவு, தமிழ் மக்களிடையே, குறிப்பாக ஆங்கிலம் மட்டும் பயின்று சர்க்கார் வேலைகளில் அமர்ந்திருப்பவர்களிடையேயும், மாணவர் சமுதாயத்திடையேயும் தங்கள் வருங்காலத்தைப் பற்றிய நியாயமான ஒரு கவலையையும் அதன் காரணமாக ஒரு கொந்தளிப்பையும், மூட்டிவிட்டுள்ளது. இந்தக் கொந்தளிப்பும், அதன் காரணமாக கல்வி நிலையங்கள் பூராவையும் மூடுமள

வுக்கு ஏற்பட்ட மாணவர்களது கட்டுக்கடங்காத கிளர்ச்சியும், சர்க்காருடைய தவறான மொழிக்கொள்கையின் விளைவு என கம்யூனிஸ்ட் கட்சியின் செயற்குழு வன்மையாகக் கண்டிக்கிறது.

## மும்மொழிக் கொள்கையை ஏன் அமுல் நடத்தவில்லை ?

இந்திய அரசியல் சட்டம் இயற்றப்பட்டபின் சென்ற 15 ஆண்டுகளாக, பிரதேச மொழிகளை அவற்றிற்குரிய ஆட்சி பீடத்தில் குறிப்பாக ஹிந்தி பேசாத மாநிலங்களில் அமர்த்துவதற்கு மத்திய சர்க்காரும் மாநில சர்க்கார்களும் அறவே தவறிவிட்டன. தமிழ்நாட்டில் சர்வகட்சியினரும் ஒப்புக் கொண்டுள்ள, மத்திய சர்க்காராலும் அங்கீகரிக்கப் பட்டுள்ள மும்மொழிக் கொள்கையை, [அதாவது அரசாங்க நிர்வாகம், நீதிமன்றம், கல்விப் பயிற்சி ஆகியவற்றிற்கு பிரதேச மொழி தமிழ், அடுத்தது ஆங்கிலம், மூன்றாவது ஹிந்தி; ஹிந்தி பேசும் பகுதியில், ஹிந்தி முதலிடம், ஆங்கிலம் இரண்டாவது இடம், இந்தி அல்லாத மற்றொரு இந்திய மொழி மூன்றாவது இடம்—இந்த அடிப்படையில் மூன்று மொழிகளைப் பயன் படுத்துவது, இந்திய ஒருமைப்பாட்டிற்கும், ஆங்கிலத்திற்குப் பதிலாக பிரதேச மொழி இடம் பெறுவதும், மத்திய ஆட்சியில் ஒரு இந்திய மொழி தொடர்பு மொழியாக அமைவதற்கும், வழிவகை ஏற்படும். இந்தக் கொள்கை 1957ல் சென்னை அரசாங்கம் கூட்டிய சர்வகட்சி மகாநாட்டில் எல்லாக் கட்சிகளாலும் (திமுக) உள்பட ஒப்புக்கொள்ளப்பட்டது. இதைத் தான் மும்மொழிக் கொள்கை என்று அழைக்கிறோம்.] அமுல் நடத்துவதற்கு பல மாநில சர்க்கார்கள் தயாராக இல்லை.

## ஆங்கிலம் துணை ஆட்சிமொழி

தமிழ் நாட்டில் காங்கிரஸ் சர்க்கார் தமிழைப் பயிற்சி மொழியாக்காமல், ஆங்கிலத்தையே சாசுவதமான பயிற்சி மொழியாக்கும் பாதையில்தான் நிற்கிறது. மத்திய பப்ளிக் சர்வீஸ் கமிஷன் பரீட்சைகளில் அவரவர்கள்

பிரதேச பாஷையில் பரீட்சை எழுதலாமென்ற ஜனநாயகக் கோரிக்கையையும் ஒப்புக்கொள்ளப்படவில்லை. அவசியமான காலம் வரையில் ஆங்கிலம் துணை ஆட்சி மொழியாக சட்டபூர்வமாக இருப்பதன் மூலம் தான் ஹிந்தி பேசாத மக்களின் உரிமைகள் பாதுகாக்கமுடியும் என்ற நியாயமான முடிவை சர்க்கார் கட்டாயம் ஏற்று அதற்குச் சட்டபூர்வமான உத்தரவாதம் அளித்தாலொழிய, மொழிப் பிரச்சினை நாட்டின் ஒற்றுமைக்கே உலை வைக்கும் தன்மையில் திருப்பிவிடப்படுமென்று செயற்குழு எச்சரிக்கை செய்கிறது. இந்தச் சூழ்நிலையில்தான் தமிழை ஆட்சி மொழியாக்கும் கோரிக்கையைப் பின் தள்ளி, ஹிந்தி எதிர்ப்பின் பெயரால் ஆங்கிலம் என்றென்றும் நீடிப்பதற்குக் கிளர்ச்சி துவக்கப்பட்டது. சென்ற இரண்டு வாரகாலமாக தமிழ் நாட்டில் ஏற்பட்டுள்ள விரும்பத் தகாத கொந்தளிப்பின் மையம் ஆங்கிலமா அல்லது ஹிந்தியா என்பது தான், ஆங்கிலம் சாசுவதமாக ஆட்சி பீடத்தில் அமர வேண்டுமென்பதுதான். இந்தக் கோரிக்கைக்கு வலுவூட்டுவதற்காகத்தான் நமது தாய்மொழி தமிழைப் பற்றி வெறும் புகழ்பாடி பலியாக்கும் போக்கைப் பார்க்க முடிகிறது.

## திருச்சி மாநாடும் முதலமைச்சரின் தவறான அணுகும் முறையும்

ஜனவரி 17-ம் தேதியன்று திருச்சியில் நடந்த ஹிந்தி எதிர்ப்பு மகாநாட்டின் நடவடிக்கைகள் தான் இந்தக் கொந்தளிப்பின் துவக்கமாக அமைந்தது. அங்கே பிற்போக்கின் உறைவிடமான சுதந்திராக் கட்சியின் பிரதிநிதியாக ராஜாஜியும், நாட்டுப் பிரிவினையையும் மொழி வெறியையும் தங்கள் அரசியல் ஆயுதமாகத் தொடர்ந்து பயன்படுத்திவரும் சுதந்திராவின் கூட்டாளியான தி மு க வின் பிரதிநிதியும், கருமுத்து, G. D. நாயுடு போன்ற முதலாளிகளும், P. T. ராஜன் போன்ற பழைய ஜஸ்டிஸ் கட்சிப் பிரதிநிதிகளும் ஒன்றுகூடி ஹிந்தி எதிர்ப்பு வெறிக்குத் தீர்மானமிட்டனர். இதைத் தொடர்ந்துதான் 25-ம் தேதி மாணவர்கள் ஹிந்தி

எதிர்ப்பு தினம் கொண்டாட முடிவு செய்தனர் இந்த நடவடிக்கைகளுக்குப் பிறகாவது நமது மாநில சர்க்கார் மாணவர்கள் பிரதிநிதிகளை அழைத்துப் பேசியிருந்தால், அவர்களுக்கு மொழிப் பிரச்னையில் ஏற்படும் நியாயமான பாதிப்புகளை நீக்க கூறியிருந்தால், பல தீய விளைவுகளைத் தடுத்திருக்க முடியும். முதலமைச்சரும், கல்வி அமைச்சருமான திரு பக்தவத்சலம் அவர்கள் மாணவர்களிடையே காட்ட வேண்டிய பரிவையும் கடமையையும் மறந்து, 25-ம் தேதி நடந்த மாணவர்கள் கிளர்ச்சியை, சட்டம் அமைதிப் பிரச்னையாகப் பாவித்து அடக்கு முறையை ஏவி விட்டது மிகப் பெரிய அரசியல் தவறு என்று செயற்குழு சுட்டிக் காட்ட விரும்புகிறது. முதலமைச்சரின் இத்தவறான அணுகும் முறை காரணமாக மாணவர்களது கிளர்ச்சியும் போலீஸ் அடக்கு முறையும் ஒன்றை ஒன்று தூண்டுவதைப் போன்று சென்ற இரண்டு வாரங்களில் தமிழ் நாட்டின் பொது வாழ்வுக்கே களங்கம் விளைத்து வருகிறது.

## ஹிந்தி எப்போது இணைப்பு மொழியாக ஆக முடியும்?

இந்தியாவில் ஆங்கிலத்துக்குப் பதிலாக ஹிந்தியை இணைப்பு மொழியாக்குவதென்பது இயற்கையான வகையில் ஜனநாயக மறு மலர்ச்சியில் ஏற்படும்விளைவு. இதற்குக் கால வரை குறிப்பிட முடியாது. காலம் ஜனநாயக மறுமலர்ச்சியின் வேகத்தைப் பொறுத்த விஷயம். ப்ரகடனம் செய்யப்பட்ட 14 தேசீய மொழிகளும் அந்தந்தப் பிராந்தியத்தில், நிர்வாகம், நீதிமன்றங்கள், கல்வி பயிற்சி ஆகிய துறைகளில் பிரதேச மொழி அரியணையில் ஏற்றப்பட்டா லொழிய, பொதுத் தொடர்பு மொழியாக ஆங்கிலத்தை அகற்றிவிட்டு ஹிந்தி வர முடியாது. எல்லாப் பிராந்தியங்களும் அந்நிலை எய்துவதற்கு மத்திய சர்க்காரும் மாநில சர்க்காரும் கூட்டாக சட்டபூர்வமாக உத்திரவாதம் ஏற்கவேண்டும். இந்த இடைக் காலத்தில் மும்மொழிக் கொள்கை எல்லா ராஜ்யத்திலும் கட்டாயமாக அமுலாக்கப்பட வேண்டும். இந்த இடைக்

காலத்தில் மத்திய சர்க்கார் உத்தியோகங்களில் எல்லோருக்கும் நீதி கிடைக்கும் பாதுகாப்பு உத்தரவாதம் செய்ய வேண்டும். இத்தகையதொரு இயற்கை நியதியை மீறி ஹிந்தியைப் புகுத்துவதும் அதை பிற்போக்கு நோக்குடன் எதிர்ப்பதும் இறுதியில் நாட்டின் ஒற்றுமையை உருக்குலைத்து சுதந்திரத்திற்கே ஆபத்து விளைவிக்கும் என்று செயற்குழு எச்சரிக்கை செய்கிறது. நினைப்பதற்கும் அச்சம் தரக்கூடிய இந்தப் பாதகமான போக்குகளை எதிர்த்து நிற்பது சகல ஜன நாயக சக்திகளின் அவசர அவசியக் கடமையென்றும் செயற்குழு வலியுறுத்தி அறைகூவல் விடுக்கிறது.

## கிளர்ச்சியைத் தூண்டுவதில் முதலாளிகள் அக்கறை

மேலும், சென்ற இரண்டு வாரங்களில் நடந்த மாணவர்களது கட்டுக்கடங்காத கிளர்ச்சியைத் தூண்டுவதில், பெரும்பாலான கல்வி நிலையங்களை நடத்திவரும் தமிழ்நாட்டு முதலாளிகளும் நிலப்பிரபுக்களும் பங்கெடுத்துள்ளனர். ஆசிரியர்களில் ஒரு பகுதியினர் அவர்களது அரசியலுக்குக் கருவியாகச் செயல்பட்டுள்ளனர். கல்வி நிலையங்கள் பிற்போக்கு சக்திகளின் அரசியல் சூதாட்டக் கருவிகளாக உருவாக்கப்படும் ஆபத்து வளராமல் தக்க பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கும் அவசியம் ஏற்பட்டுள்ளது என்பதை செயற்குழு வலியுறுத்திக் கூறுகிறது.

## அரசு செய்ய வேண்டியதென்ன?

ஏற்படுத்தப்பட்டுள்ள இந்தத் துர்ப்பாக்கிய சூழ்நிலைக்கு உடனடியாக முற்றுப்புள்ளி வைத்தாக வேண்டும். சர்க்கார் தரப்பில், ஹிந்தி புகுத்திய உத்திரவை உடனே நிறுத்தி வைக்க வேண்டும். திரு. நேருவின் உறுதிமொழிக்கு மாறாக, சர்க்கார் மொழிக் கொள்கையை தவறாக அமுலாக்கப் பட்டதன் காரணமாகவும் இதைப் பயன்படுத்திக் கொண்டு பிற்போக்கு சக்திகளின் ஹிந்தி எதிர்ப்பு சாசுவத

மாக ஆங்கிலம் வேண்டும் என்ற கோரிக்கைக்கான கிளர்ச்சியைத் தூண்டிவிட்டதும், இந்தத் தவறான இரு போக்குகளிடையே மாணவர் சமுதாயம் உணர்ச்சி வசப்பட்ட நிலையில் கொந்தளிப்புக்கு ஆளாகியிருப்பதும் ஒரு முடிவுக்குக் கொண்டு வருவது அவசர அவசியமாகும். அதற்குக் கீழ்க் கண்ட நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமென்று செயற்குழு வேண்டுகோள் விடுக்கிறது.

1. ஹிந்தியை ஆட்சி மொழியாக்கும் உத்தரவையும், சுற்றறிக்கையையும் நிறுத்தி வைக்கவேண்டும்.

2. மத்திய பப்ளிக் சர்வீஸ் கமிஷன் பரீட்சைகள் எல்லா தேசீய மொழிகளிலும் எழுதுவதற்கும் தேர்வு பெறுவதற்கும் உரிமை வழங்கப்பட வேண்டும். திரு. நேருவின் உறுதிமொழியின் உள்ளடக்கத்தின் அடிப்படையில் ஹிந்தி பேசாத மக்களின் சம்மதம் கிடைக்கும் வரையில் ஆங்கிலமும் துணை மொழியாக இருக்கும் வகையில் சந்தேகத்துக்கிடமில்லாமல் சட்ட உத்தரவாதம் வேண்டும்.

3. எல்லா மாநிலங்களிலும் அந்தந்த பிராந்திய மொழிகளை ஆட்சி, நீதி, நிர்வாக, கல்வி பயிற்சி மொழியாக்குவதற்கு உத்தரவாதம் செய்யவேண்டும்.

4. கல்வித் துறையில் மும்மொழிக் கொள்கையை எல்லா ராஜ்யங்களிலும் கட்டாயம் அமுல் நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும்.

5. உடனே நாட்டின் பிரதம மந்திரி சகல அரசியல் கட்சிகளையும் கூட்டி மேற்சொல்லப்பட்ட அடிப் படையில் விவாதித்து மொழிப் பிரச்னையில் ஒருமித்த தேசியக் கொள்கையை முடிவு செய்ய வேண்டும்.

6. நமது ராஜ்யத்தில், முதலமைச்சர் உடனடியாக சகல கல்வி ஸ்தாபனங்களிலிருந்தும் மாணவர் பிரதிநிதிகளைக்கூட்டி, அவசியமான நடவடிக்கைகள் எடுக்

கப்படுமென்று விளக்கம் தந்து கிளர்ச்சியைக் கைவிடும்படி கோரவேண்டும்.

7. அண்ணுமலை சர்வகலாசாலையில் துப்பாக்கிப் பிரயோகத்தில் பலியான மாணவனின் குடும்பத்துக்கும் இதர காயமடைந்த மாணவர்களுக்கும் போதிய நஷ்டஈடு தரவேண்டும்.

8. கைதான எல்லா மாணவர்களையும் விடுதலை செய்து எல்லா வழக்குகளையும் வாபஸ் பெறவேண்டும். எந்த மாணவன்மீதும் எத்தகைய ஒழுங்கு நடவடிக்கையும் எடுக்கக்கூடாது.

9. மாணவர்கள்மீது ஏவப்பட்டுள்ள துப்பாக்கிப் பிரயோகம் தடியடி இதர பலாத்காரத் தாக்குதல்கள்பற்றி நீதி விசாரணை நடக்கவேண்டும்.

மாணவர் சமுதாயத்தின் நியாயமான அபிலாஷைகளைப் புரிந்துகொண்டு உணர்ச்சி வசப்படக்கூடிய சூழ்நிலைகளில் அவர்களைப் பாதுகாக்கும் நோக்குடன் அணுகுவது பொது வாழ்வில் உள்ள ஜனநாயக சக்திகளின் கடமையாகும். இந்தப் பொறுப்புணர்ச்சியுடன் மாணவர் சமுதாயத்தை உடனே கிளர்ச்சியை நிறுத்தும்படி செயற்குழு வேண்டிக் கொள்கிறது.

சென்னை
9-2-65

மணலி கந்தசாமி,
செயலாளர்,
தமிழ் மாநிலச் செயற்குழு,
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி.

